[24th September 1958

*Education of girls and women*

**Sri A. V. P. ASAITHAMBI**: சார், தமிழ் கேள்விப் பட்டியலில் 502-வது கேள்வியின் தலைப்பில் "பெண்கள், ஸ்ரீகள் கல்வி" என்று தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறதே. இந்த "ஸ்ரீகள்" யார்?

**The Hon. Sri C. SUBRAMANIAM**: பெண்களைத்தான் குறிக்கிறது. இந்த மாதிரி பல குறைகள் இருக்கலாம். போகப் போகப் போய் விடும். டைப்பிங் பிழையாக இருக்கும்.

**Sri A. V. P. ASAITHAMBI**: டைப்பிங் பிழை அல்ல. ஸ்திரீ கள் என்பதற்கே ஸ்ரீகள் என்று போட்டிருப்பதாகத் தெரிகிறது.

The Hon. Sri C. SUBRAMANIAM: I would request hon. Members to bring to the notice of persons concerned the printing and typing mistakes. These things need not be made the subject-matter of a discussion here.

(The hon. Member Sri Asaithambi again stood up in his place.)

Mr. SPEAKER: The hon. Member may bring such things to my notice in my Chamber.

*** 502 Q.—Sri A. VEDARATHNAM**: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) பெண் கல்வி அபிவிருத்திக்காக மத்திய அரசாங்கம் நம் அரசாங் கத்திற்கு எவ்வளவு நிதி உதவியிருக்கிறது?

(ஆ) அதில் எவ்வளவு தொகை இதுவரையில் பயன் படுத்தப்பட் டிருக்கிறது?

(இ) அதன் மூலம் நிறைவேற்றப்பட்டிருக்கும் திட்டங்கள் எவை?

The Hon. Sri C. SUBRAMANIAM: (*a*) The scheme of the Government of India for the expansion of circle and women's education is under the consideration of Government. No grants have been received so far as the proposals were not finalised. If the scheme is approved the Government of India will sanction 75 per cent of the total expenditure as their assistance.

(*b*) & (*c*) Does not arise.

**Sri A. VEDARATHNAM**: மத்திய அரசாங்கம் இந்தப் பெண் கள் கல்வி முன்னேற்றத்திற்காக மூன்று கோடியே 30 லட்சம் ஒதுக்கி யிருந்தும் இதுவரையில் அதைப் பயன்படுத்திக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லையே. நமது நாட்டில் பெண்கள் கல்வி பிரதானமாக இருந்தும் இந்தத் தொகையைப் பயன்படுத்திக்கொள்ளாத காரணம் என்ன? இனி யேனும் பயன்படுத்திக் கொண்டு கல்வியின் முன்னேற்றத்திற்காக அர சாங்கம் ஏதேனும் வழிவகுத்திருக்கிறார்களா?

**The Hon. Sri C. SUBRAMANIAM**: இதில் முக்கியமான கஷ்டம் என்ன வென்றால் இந்தியாவிலுள்ள எல்லாப் பகுதிகளுக்குமாகச் சேர்ந்து அவர் கள் ஒதுக்கிவிடுகிறார்கள். அந்த அந்தப் பிராந்தியத்தின் அமைப்புக் கேற்ப அதை மாற்றி அமைக்கவேண்டுமென்ற அனுமதியைக் கேட்டிருக்கி றோம். அதற்குப் பதில் வந்த பிறகு இதைப்பற்றி பரிசீலனை செய்து அந்தத் தொகையை உபயோகப்படுத்திக்கொள்ள நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.